REGD. No. TN MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 ❋ 4 பக்கம் விலை 30 காசு

**வீரம்**

எவராவது என் கன்னத்தில் அடிக்க நேர்ந்தால் என் தலையை வெட்டவும் அவரை அனுமதிப்பேனே தவிர எவருக்கும் தலைகுனியவே மாட்டேன்.

—அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்



**லட்சியப் பாதை**

மக்கள் சமுதாயம் மிகக் கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்த மக்களாட்சி முறை, இன்ப புரிக்கு ஏற்ற லட்சியப் பாதையாகும்.

—பேரறிஞர் அண்ணா

மலர்: 3 (●) சென்னை 2—1—1979 செவ்வாய் (★)❋●❋(★) (★)❋●❋(★) (★)❋●❋(★) வேலூர் 3—1—1979 புதன் (●) இதழ்: 77

## தலைமைக்கழக அறிவிப்பு

# உறுப்பினர் விண்ணப்ப தாள் பெறுவது எப்படி

**கழக உறுப்பினர் சேர்ப்பது குறித்து தலைமைக் கழகத்தின் சார்பில் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டுள்ளார்.**

தலைமைக் கழக அறிக்கை விவரம் வருமாறு:-

1. கழக உறுப்பினர்களைச் சேர்ப்பதற்கான விண்ணப்பத்தாள்கள் 1979 ஜனவரி 7ஆம் நாளிலிருந்து தலைமை நிலையம் கிளைக் கழகங்களுக்கு அனுப்பி வைக்கும்.

2. சிற்றூர்க்கிளை - பேரூர்க்கிளை - நகரக்கிளை - நகரியக்கிளை பெருநகர உட்கிளை ஆகியவற்றின் அமைப்பாளர்களுக்கு மட்டுமே தேவைப்படும் விண்ணப்பத்தாள்கள் அனுப்பிவைக்கப்படும்.

3. அமைப்பாளர் இல்லாத இடங்களில், அல்லது புதிதாகக் கிளையை உருவாக்க வேண்டிய இடங்களில், ஒன்றிய-தொகுதி - மாவட்ட அமைப்பாளர்களில் முறையே ஒருவர், அந்த இடத்திலே உள்ளபொறுப்பு வாய்ந்த ஒருவரின் பெயரைப் பொறுப்பாளராகத் தேர்ந்தெடுத்து தலைமைக் கழகத்திற்குப் பரிந்துரை செய்யலாம்.

4. கிளை (உட்கிளை) களின் அமைப்பாளர்களின் முகவரிகளையும், தேவைப்படும் விண்ணப்பத் தாள்களின் எண்ணிக்கையையும் குறித்து ஒன்றிய - தொகுதி-மாவட்ட அமைப்பாளர்கள், தலைமை நிலையத்திற்கு அவ்வப்போது அனுப்பிவைக்கலாம். கிளைகளும் நேரிடையாக அவைகளைத் தலைமை நிலையத்திற்குத் தெரிவிக்கலாம்.

5. ஒரு உறுப்பினர் விண்ணப்பத்தாளில் 25 பேர்களை பதிவு செய்யலாம். உறுப்பினர் கட்டணமாக ஒவ்வொருவரும் ரூபாய் ஒன்று செலுத்த வேண்டும். நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பத்தாள்களையும், உரிய கட்டணத் தொகையையும் பொதுச்செயலாளர், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம், தலைமை நிலையம், 275, அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரிக்கு அனுப்பிவைக்க வேண்டும். கட்டணத்தொகை இல்லாமல் வருகின்ற விண்ணப்பத்தாள்கள் கவனிக்கப்பட மாட்டா.

6. விண்ணப்பத்தாளில் புதிய உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும். பழைய உறுப்பினர்களைப் புதுப்பிக்க வேண்டும் பழைய உறுப்பினர்கள் தாங்கள் முதன் முதலில் கழகத்தில் சேர்ந்த ஆண்டு திங்கள் ஆகியவற்றை விண்ணப்பத்தாளில் குறிப்பிட வேண்டும் எந்த ஆண்டிலிருந்து உறுப்பினர் என்று கேட்கும் 'கலத்தில்' 1972 அக்டோபர் என்றோ 1975 பிப் என்றோ 1977 செப் என்றோ குறிப்பிட வேண்டும்.

7. நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பத்தாள்கள் கிளை (உட்கிளை) அமைப்பாளர்களின் கையொப்பத்தோடு தான் தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்.

8. வேறு அரசியல் கட்சிகளின் உறுப்பினர்கள், சாதி-மதச் சங்கங்களில் முக்கிய பொறுப்பு ஏற்றிருப்பவர்கள், கழகத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டவர்கள், கழகத்திற்கு இழுக்கு உண்டாக்குபவர்கள் ஆகியோர்களை எக்காரணம் கொண்டும் உறுப்பினர்களாகச் சேர்க்கக்கூடாது.

9. உறுப்பினர்களைச் சேர்ப்பதில் எந்த அமைப்பாளராவது விருப்பு வெறுப்பு காட்டினால் குறைகாண்போர் முறையே ஒன்றிய-தொகுதி-மாவட்ட-தலைமைக் கழகத்திடம் விண்ணப்பித்துக் குறையைப் போக்கிக் கொள்ளலாம்.

10. ஊராட்சி- பேரூராட்சி- நகராட்சி ஆகியவற்றில் இணைந்துள்ள ஊர்கள் தனித்தன்மை வாய்ந்தனவாகவும், முக்கிய பகுதியிலிருந்து இடைவெளிவிட்டு வேறுபட்டனவாகவும் விளங்குமேயானால், அப்படிப்பட்ட ஊர்கள் மேல் அமைப்புகளின் அனுமதியை முன்கூட்டிப் பெற்றுக்கொண்டு தனிக்கிளைகளாக இயங்கலாம்.

11. ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் தொகையினைக் கொண்ட நகரங்களே பெருநகரங்கள் என்று கருதப்படும். பெருநகரங்களில் மட்டுமே ஒவ்வொரு வார்டிலும் ஒரு உட்கிளை அமைக்க உரிமை உண்டு. உட்கிளையின் முறையான பிரதிநிதிகள் சேர்ந்ததே பெருநகரக் கிளையாகும். மற்ற நகரங்களில். (ஒரு லட்சம் மக்கள் தொகைக்குக் குறைவான மக்களைக்கொண்ட நகரங்களில்) ஒரு நகரக்கிளை தான் அமைய வேண்டும் அப்படிப்பட்ட நகரங்களில் வார்டுகளில் வழக்கம் போல் துணைச்சார்பு மன்றங்கள் அமையலாம்.

12. கிளை (உட்கிளை) அமைப்பாளர்களுக்கு அனுப்பிவைக்கப்படும் விண்ணப்பத்தாள்களை அவர்கள் தொலைத்துவிட்டாலும், அல்லது வேறு எந்தக் கிளையிடமாவது கொடுத்துவிட்டாலும், அப்படிப்பட்ட அமைப்பாளர்கள் கழகத்தில் எந்த ஒரு பதவிக்கும் போட்டியிடக் கூடிய தகுதியை இழக்க வேண்டிவரும். வாங்குகிற விண்ணப்பத்தாள்களுக்கு உரிய கிளை (உட்கிளை) அமைப்பாளரே பொறுப்பாவார். விண்ணப்பத்தாள்கள் நிறைவு செய்யப்படாமல் இருந்தால், அவைகளையும் திரும்ப தலைமை நிலையத்திற்கே அனுப்பிவைத்து விடவேண்டும்.

13. நிறைவு செய்து அனுப்பப்படும் விண்ணப்பத் தாளையோ அல்லது விண்ணப்பத்தாளில் கண்டுள்ள ஒருசில உறுப்பினர்களையோ காரணம் ஏதும் காட்டாமல் மறுத்துவிடத் தலைமைக்கழகத்திற்கு முழு உரிமை உண்டு.

14. 1979 மார்ச்சு 31ஆம் நாளுக்குள் உறுப்பினர் சேர்க்கும் புதுப்பிக்கும் பணிகள் முடிவு பெற வேண்டும்.

15. உறுப்பினர் உரிமைச் சீட்டுகள் தலைமைக்கழகத்தால் கிளை (உட்கிளை) அமைப்பாளர்கள் மூலம் உறுப்பினர்க்கு அனுப்பிவைக்கப்படும்.

16. துணைச்சார்பு மன்றங்களைச் சேர்ந்தவர்கள் அந்தந்த இடத்திற்குரிய கிளை-உட்கிளை அமைப்பாளர்களிடமிருந்து தேவையான விண்ணப்பத்தாள்களைப்பெற்று நிறைவு செய்து அந்த அமைப்பாளரின் அடிக்கையொப்பத்தோடு, அந்த அமைப்பாளரின் மூலம் தலைமை நிலையத்திற்கு அனுப்பி வைக்கலாம்.

17. தலைமைக்கழகம் தவிர்த்து எந்த ஒரு கீழ் அமைப்பிலும் பங்கு கொள்ளவோ, பதவி பெறவோ விருப்பமில்லாதவர்கள், தலைமைக் கழகத்திற்கு நேரடியாக எழுதி ஒவ்வொருவருக்கான தனி விண்ணப்பத்தாளைப் பெற்று, அதனை நிறைவு செய்து தலைமை நிலையத்திற்கு அனுப்பி வைத்து, உறுப்பினர் உரிமைச் சீட்டை நேரிடையாகப் பெற்றுக்கொள்ளலாம். அப்படி அனுப்பப்படும் விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ளவோ அல்லது காரணம் எதுவும் காட்டாமல்மறுத்தொதுக்கவோ தலைமைக் கழகத்திற்கு எந்த நேரத்திலும் உரிமை உண்டு.

18. தலைமைக்கழகத்தின் சார்பாக பொதுச்செயலாளர் மேற்கொள்ளும் முடிவே எந்த ஒரு பிரச்சினையிலும் இறுதியான முடிவாகும். அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தோடு தொடர்புடைய எந்த ஒரு பிரச்சினை குறித்தும் எவர் ஒருவரும் எந்த ஒரு வழக்கு மன்றத்திற்கும் செல்ல அறவே உரிமை கிடையாது

சென்னை 14
3-1-79

**இரா. நெடுஞ்செழியன்,**
பொதுச்செயலாளர் பொறுப்பு
அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம்

## செம்பரம்பாக்கம் ஏரியை பலப்படுத்த ரூ.1 கோடி ஒதுக்கீடு

**குழந்தைவேலு தகவல்**

சென்னை, ஜன. 2—செம்பரம்பாக்கம் ஏரிக்கரையை பலப்படுத்தவும் ரெகுலேட்டர் மதகு அமைக்கவும் அரசு ரூ 1 கோடி ஒதுக்கியுள்ளது என்று அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

பெருமழை பெய்கிற சமயங்களில் சென்னை நகரை அச்சுறுத்தும் செம்பரம்பாக்கம் ஏரிக்கரைகளை பலப்படுத்தி நகருக்குப் பாதுகாப்பு அளிக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளது ஏரியில் மதகு அமைக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது. இதற்கு ரூ. 1 கோடி ஒதுக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

அமைச்சர்கள் குழந்தைவேலு, அரங்கநாயகம், ராஜாமுகமது ஆகியோர் செம்பரம்பாக்கம் சென்று பார்வையிட்டனர்.

கரையை பலப்படுத்தும் வேலையையும் ரெகுலேட்டர் அமைக்கும் வேலையையும் விரைவில் முடிக்க அதிகாரிகளுக்கு உத்திரவிடப்பட்டுள்ளது.

புழலேரியையும் அமைச்சர்கள் பார்வையிட்டனர் தலைமைப் பொறியாளர் மணவாளனும் உடன் சென்றிருந்தார்.

### முகாம்களில் இருந்தோர் வீடு திரும்பினர்

வெள்ளத்தால்பாதிக்கப்பட்டு நிவாரண முகாம்களில்தங்கியிருந்த 75 ஆயிரம் பேர்களில் இன்று 50 ஆயிரம் பேர் வீடு திரும்பினர் நேற்று இவர்களுக்கு இரண்டே கால் லட்சம் உணவு பொட்டலங்கள் வழங்கப்பட்டது. இன்று முகாம்களில் தங்கி இருந்தோர்க்கு 70 ஆயிரம் உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டன.

இன்று செம்பரம்பாக்கம் ஏரியில் தண்ணீர் வரத்து குறைந்து விட்டது.

### பத்திரிகை நிருபர்களுக்கு புரட்சித்தலைவர் பொங்கல் பரிசு

சென்னை, ஜன 2—மாவட்டங்களில் பணியாற்றும் பத்திரிகை நிருபர் (நாளிதழ்செய்தி நிறுவனத்தைச்சேர்ந்தவர்கள்)களுக்கு இலவசமாக பஸ்ஸில் பயணம் செய்ய முதல்வர் புரட்சித்தலைவர் அனுமதித்துள்ளார்

சென்னை நகரில் உள்ள நிருபர்கள் புறநகர் பகுதிகளுக்கும் செல்வதற்கான பாஸ்கள் வழங்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்துள்ளார்.

இந்தத் திட்டம் ஜனவரி 15ஆம் தேதி முதல் அமலுக்கு வருகிறது.

உலகதிரைப்பட விழா

### ஆர். எம். வீ. டெல்லி பயணம்

சென்னை, ஜன. 2-டெல்லியில் நடைபெறும் உலக திரைப்பட தொடக்கவிழாவில் தமிழக செய்தி சுற்றுலாத் துறை அமைச்சர் ஆர்.எம்.வீ. கலந்துகொள்கிறார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. இன்று மாலை விமானம் மூலம் டெல்லி செல்கிறார். 3ந்தேதி டெல்லியில் நடைபெறும் உலக திரைப்பட தொடக்க விழாவில் பங்கேற்கிறார்.

டெல்லியிலிருந்து 4ந்தேதி மாலை விமானமூலம் புறப்பட்டு சென்னை வருகிறார்.

### சிமெண்ட் பர்மிட்: பொன்னையன் அறிவிப்பு

சென்னை, ஜன-2 ஐந்து மூட்டைகளுக்கு குறைவான சிமெண்ட் தேவையுள்ளவர்கள் சிவில் சப்ளைஸ் கார்பரேஷன் கடைகள் கூட்டுறவுக் கடைகள் மூலமாகவும் பெற்றுக் கொள்ளலாம் என்று அமைச்சர் பொன்னையன் அறிவித்தார்.

5 மூட்டைகளுக்கு மேல் 20 மூட்டைகள் வரையில் தேவை உள்ளவர்கள் அனுமதி பெற்று எந்தக் கடையிலும் வாங்கிக்கொள்ளலாம்.

20 மூட்டைகள் தேவையானவர்கள் அதற்குரிய அனுமதி பெற்று வாங்கிக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## தி.மு.க எம்.எல்.ஏ.வை கொலைசெய்ய முயற்சி: 3 திமுகவினர் கைது

சென்னை, ஜன 2— பூந்தமல்லி திமுக சட்டமன்ற உறுப்பினர் டி ராஜரத்தினத்தை கொல்ல முயற்சித்ததாக திமுகவைச் சேர்ந்த பாலன், பழனி, ஞானம் ஆகிய 3பேர்கைது செய்யப்பட்டனர்.

இது தொடர்பாக செங்கை மாவட்ட [illegible] பகுதி போலீஸ்சூப்பிரண்டு ராஜமாணிக்கம் தலைமையில் போலீசார் தீவிரபுலன் விசாரணை செய்து வருகிறார்கள்.

பூந்தமல்லி தொகுதி எம் எல் ஏ ராஜரத்தினத்தை கடந்த சில தினங்களுக்கு முன்பு திமு குண்டர்கள் சிலர் புகுந்து தாக்கினார்கள் சோடாபாட்டில்கள் மாறியாக வீசப்பட்டன இதனால்ராஜரத்தினம் படுகாயமடைந்தார் படுகாயமடைந்த நிலையில் ராஜரத்தினம் போலீசில் புகார் கொடுத்தார்.

இதுபற்றி போலீசார் புலன் விசாரித்து பாலன், பழனி, ஞானம் ஆகிய மூவரையும் கைது செய்தனர். இவர்கள் மூவரும் திமு கழகத்தினர். போலீசார் புலன் விசாரித்து வருகிறார்கள்.

துயர்தணிப்பு நிதிக்[illegible]

### சையத் யூசுப் ரூ. 15 ஆயிரம்

சென்னை ஜன 2 பெருமழையால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்வதற்காக முதல்வரின் நிவாரண நிதிக்கு வக்புவாரிய தலைவர் சையத்யூசுப் ரூ. 15 ஆயிரத்தை வழங்கியுள்ளார்.

கே. பி. வி. ஷேக்முகமத் ராவுத்தர் கம்பெனி சார்பாக ரூ 15 ஆயிரத்தை சையத்யூசுப் முதல்வரிடம் வழங்கினார்.

நாடு பொருளாதார வளர்ச்சி அடைய

## முக்கிய கருவி இறக்குமதிக்கு கட்டுப்பாட்டை தளர்த்துவீர்

மத்திய அரசுக்கு முதல்வர் வேண்டுகோள்



வெள்ள நிவாரண பணிகளுக்காக முதல்வர் புரட்சித்தலைவரிடம் சென்னை ரோட்டரி சங்க தலைவர் தீபக் எல் பேங்கர் 400 புடவைகளையும் 400 லுங்கிகளையும் வழங்கினர்

சென்னை, ஜன 2— நாடு பொருளாதார வளர்ச்சியை அடைய முக்கிய கருவிகள் இறக்குமதி கட்டுப்பாட்டை தளர்த்தவேண்டும் என்று மத்திய அரசை முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டுக்கொண்டார்.

இந்தியாவில் உள்ள 5 சர்வதேச விமான நிலையங்களில் சுங்க சோதனைகளின் முறைகள் தளர்த்தப்பட்டுள்ளன.

சென்னை விமான நிலையத்திலும் இந்த வசதிசெய்யப்பட்டுள்ளது.

இதையொட்டிய நிகழ்ச்சியில் முதல்வர்புரட்சித்தலைவர் கலந்துகொண்டார்.

புத்தாண்டன்று சென்னைக்கு வந்த வெளிநாட்டு பயணிகளுக்கும் விமான நிலையத்தில் வரவேற்பு கொடுக்கப்பட்டது. சென்னை சுங்க இலாகா கலெக்டர் ஏ.சி.சுல்தான்கான் வரவேற்றுப் பேசினர்.

மத்திய சுங்கவாரிய உறுப்பினர் எஸ் வெங்கடேசன் இத்திட்டம் பற்றி விளக்கிப்பேசினார்.

முதல்வர் புரட்சித்தலைவர் பேசும்போது கூறியதாவது:

வெளிநாட்டில் இருந்து விமானம் மூலம் இந்தியாவுக்கு வரும் பிரயாணிகளுக்கு விமானநிலையத்தில் சோதனை என்றபெயரில் பல தொல்லைகள் ஏற்படுவதாக சொல்லப்படுகிறது.

அதிகாரிகள் தங்கள் கடமையை- அவர்களிடம் கொடுக்கப்பட்டுள்ள பொறுப்பைத்தான் செய்கிறார்கள் பொறுப்பை சரியாகச்செய்யும்போது, கெட்ட பெயர்

(2ம் பக்கம் பார்க்க)





ஜனவரி முதல்தேதி பிறந்த

# குழந்தைகளுக்கு போர்வைகள்: பி. டி. எஸ். வழங்கினர்

சென்னை, ஜன 2— ஜனவரி முதல் தேதி யன்று பிறந்த குழந்தைகளுக்கு அமைச்சர் பி டி எஸ் போர்வைகள் வழங்கினர்

சர்வதேச குழந்தைகள் ஆண்டையொட்டி நேற்று (ஜனவரி முதல் தேதி) சென்னை அரசினர் மருத்துவமனைகளில் பிறந்த குழந்தைகளுக்கு சமூக நல அமைச்சர் பி. டி. எஸ். சர்வதேச குழந்தைகள் ஆண்டின் முத்திரை பதிக்கப்பட்ட போர்வைகளை இன்றுவழங்கினர்.

திருவல்லிக்கேணி கஸ்தூரிபா மருத்துவமனையில் 32 குழந்தைகளுக்கு போர்வைகள் வழங்கினர். ஆர் எஸ் ஆர் எம் அரசு மருத்துவமனையில் 17 குழந்தைகளுக்கு அமைச்சர் பி. டி. எஸ். நேரில் சென்று போர்வை வழங்கினர்.

குழந்தைகளை ஈன்ற தாய்மார்களுக்கு புத்தாண்டு வாழ்த்தையும் பி.டி.எஸ் மகிழ்ச்சியுடன் தெரிவித்தார். அமைச்சருடன் சமூக நலத்துறை இயக்குநர் டி. தர்மராஜ், அதிகாரி சினிவாசன் ஆகியோரும் சென்றிருந்தனர்.

கீழ்ப்பாக்கம் மருத்துவமனை, எழும்பூர் குழந்தைகள் மருத்துவமனை, சூளையில் உள்ள மாநகராட்சி மருத்துவமனை ஆகிய மருத்துவமனைகளில் பிறந்த குழந்தைகளுக்கும் அமைச்சர் பி. டி. எஸ் நேரில் சென்று போர்வைகளை வழங்குகிறார்.

நாளை (புதன்கிழமை)

காலை பி டி.எஸ் ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று இவற்றை வழங்குகிறார்.

## தஞ்சை மாவட்ட மாணவர்களுக்கு

9-1-79 செவ்வாய்மாலை 4 மணிக்கு தஞ்சை நகராட்சிபயணியர் விடுதியில் (பஸ் ஸ்டாண்டு) மாவட்ட மாணவர் செயல்வீரர் கூட்டம் நடைபெறுகிறது.

அனைத்துக்கல்லூரி கழக அமைப்பாளர்களும், தொகுதி பள்ளி அமைப்பாளர்களும் மற்றும் கழக மாணவத் தோழர்களும் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

ஆழி. கோ. மருதையன்
தஞ்சை மாவட்ட
மாணவர் அமைப்பாளர்

## முதல்வர் வேண்டுகோள்....

(முதல்பக்கத் தொடர்ச்சி)

வரத்தான் செய்யும் அதைப் பற்றி எல்லாம் கவலைப் படக்கூடாது.

புத்தாண்டு தினத்தன்று சென்னைக்கு வந்துள்ள வெளிநாட்டுபயணிகளுக்கு எனது புத்தாண்டு வாழ்த்துக்களை தமிழக மக்களின் சார்பில் தெரிவித்துக் கொள்கிறேன்.

### பாராட்டு

விமானத்தில் வரும் பிரயாணிகளின் உடமைகளை சோதனை போடுவதில் புதிய முறைகளைக் கையாள முடிவு செய்திருப்பது வரவேற்கத்தக்கதாகும்.

நூற்றில் ஒருவர் தவறு செய்கிறார் என்பதற்காக மற்ற 99 பிரயாணிகளை காக்க வைப்பது சரிதானா என்பதை அதிகாரிகள் ஆலோசிக்க வேண்டும்.

### தளர்த்துக

நாடு பொருளாதார வளர்ச்சி பெற நுணுக்கமான முக்கிய கருவகள் தொழில் துறைக்கு வேண்டிய இயந்திர உபகரணங்கள் ஆகியவை இறக்குமதி செய்ய கட்டுப்பாடுகளைத் தளர்த்தவேண்டும்

சென்னை விமான நிலையத்தை சுங்கவரி விதிப்பற்றதாகமாற்றவேண்டும் என்பது தமிழக மக்களின் விருப்பம் அவ்வாறு ஃப்ரீ போர்ட்டாக மாற்றினால் முக்கிய தொழில் கருவிகளை தாராளமாக கொண்டு வந்து பொருளாதார வளர்ச்சி பெறலாம் அப்படிப்பட்ட கருவிகள் கடத்தப்பட்டு வருவதைத் தடுக்க முடியும்

இவ்வாறு முதல்வர்புரட்சித்தலைவர் கூறினர்.

# வெள்ளப் பகுதிகளில் கழகத் தோழர்கள் மும்முர நிவாரண பணி

சென்னை, ஜன 2— தமிழ்நாடு முழுவதும் வெள்ளப்பகுதிகளில் கழகத் தோழர்களும், மன்றச் செயல்வீரர்களும், மகளிர் பிரிவினரும் நிவாரணப்பணிகளில் மும்முரமாக ஈடுபட்டனர்.

திருச்சியில்வெள்ளத்தால் பாதிக்கப்பட்டு வீடுஇடிந்து காயமுற்றவர்களை மருத்துவமனைக்கு சென்று 27வதுவட்ட அவைதலைவர் பி. வானமாமலை, சேவியர் துரைராஜ், வக்கீல் பெருமாள், எஸ்.எம், காந்தி, வி. பாலகிருஷ்ணன் ஆகியோர் பார்த்து ஆறுதல் கூறினர்கள். வீடு இழந்து தவிக்கும் பொதுமக்களுக்கு பி. வானமாமலை உணவுப் பொட்டலங்களை தன் பொறுப்பில் வழங்கினர்.

முத்து, மதிவாணன், என். கதிர்வேலு, கே. பாலசுந்தரம் மற்றும் மன்றத் தோழர்கள் வெள்ள நிவாரணப் பணியில் தீவிரமாக செயல்பட்டு 2 ஆயிரம் பேர்களுக்கு உணவு வழங்க ஏற்பாடு செய்து, வட்ட அமைப்பாளர் ஆர். சுப்பராயலு முன்னிலையில் வடசென்னை எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் ஈ. மதுசூதனன் உணவு வழங்கினர்.

## அண்ணா டாக்சி டிரைவர்கள்

சென்னை, மாவட்ட டாக்சி டிரைவர்கள் அண்ணா தொழிற்சங்கத்தினர் வெள்ள நிவாரணப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டனர். வெள்ளம் சூழ்ந்த பகுதிகளில் குடிசைகளை இழந்தவர்களை டாக்சிகளில் இலவசமாக ஏற்றிச் சென்று வெள்ள நிவாரண முகாம்களில் கொண்டு போய் பத்திரமாக சேர்த்தனர்.

கோடம்பாக்கம், கொய்யாத் தோப்பு, சாமியார் மடம், வடபழனி ஆகிய பகுதிகளில் வாழும் மக்களுக்கு இலவசமாக வாகன வசதிகளை செய்து கொடுத்தனர்.

சென்னை மாவட்ட டாக்சிடிரைவர்கள் அண்ணா தொழிற்சங்கச்செயலாளர் ஏ.பி. வரதராசன், கே.பி. தூயமணி, ஈ. பரமசிவம், என்.ஆர். ஸ்டாலின், எம். குமாரசாமி, ஆர்.எம்.முத்து சு. சண்முகம் ஜி. சுந்தரம் மு. சக்தி வடபழனி ஏழுமலை, ஏ. முத்து. ராமசாமி மற்றும் பலர் நிவாரணப் பணிகளில் ஈடுபட்டனர்.

## சிதம்பரம்

கடும் மழையின் காரணமாக சிதம்பரம் பகுதி மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. நிவாரணப்பணிகளில் கழகத்தோழர்களும், மாணவர் பிரிவினரும் ஈடுபட்டுள்ளனர் கே. பி. பன்னீர் செல்வத்துடன் அமைப்பாளர்கள்கிருட்டிணமூர்த்தி புலவர் கோவிந்தன், கீரப்பாளையம் அந்தோணிசாமி (சிலுவைபுரம்); வெள்ளக்கண்ணு, பஞ்சநாவன் (எண்ணநகரம்); சுப்பிரமணியன் (வடுவன்குளம்) ஆதிமூலம் (ஐந்துவீடு) ஆகியோர் நிவாரணப் பணிகளில் மும்முரமாக ஈடுபட்டனர்.

## தரமணி

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட தரமணி மகாத்மாகாந்தி நகர் ஆகிய இடங்களுக்கு சென்று நூர்ஜஹான்ரசாக் எம்.பி. சமூகநலத்துறை தலைவி திருமதி சிந்துநந்தகோபால், சுலோசனா சம்பத், ஆண்டாள் ரவூத் செல்வி சுலோசனா, டி. சகுந்தலா செல்வி மேத்யூ ஆகியோர் ஆறுதல்கூறிபால வழங்கினார்கள்.

21வது வட்டம் மீனம்பாள் நகர் பகுதியில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு மீனம்பாள்நகர்

## சமரசத்தில் ஈடுபட சந்திரசேகர் மறுப்பு

புதுடெல்லி, ஜன. 2- பிரதமர் தேசாய்க்கும் சரண்சிங்குக்கும் இடையே சமரசம் செய்துவைக்கும் முயற்சியில் ஈடுபடப்போவதில்லை என்று ஜனதா கட்சி தலைவர் சந்திரசேகர் அறிவித்தார்.

ஆனால் இருவரையும் தனித் தனியாக சந்தித்துப் பேசப் போவதாய் சந்திரசேகர் தெரிவித்தார்.

பேச்சாளர் முகவரி
கோவை
அண்ணாநம்பி
28-45 லங்கர்கானா சாலை
எண் 2
கோவை 641001

தமிழ்நாடு இயல் இசை

# நாடகமன்றம் தேர்வு: இளம் கலைஞர்கள் 24 பேருக்கு ஆதரவு

சென்னை, ஜன 2— திறமைமிக்க இளம் கலைஞர்களுக்கு ஆதரவளிக்கும் திட்டத்தின்படி தமிழ்நாடு இயல் இசை நாடகமன்றம் 24 கலைஞர்களையும் 14 சபைகளையும் தேர்ந்தெடுத்துள்ளது.

1978-79ம் ஆண்டிற்கான திறமைமிக்க இளங்கலைஞர்களுக்கு ஆதரவளிக்கும் திட்டப்படி நேர்முகத் தேர்வின் மூலம் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## சபைகள் தேர்வு

வாய்ப்பாட்டுக்குச் சென்னையைச் சேர்ந்த விஜயலட்சுமி கிருஷ்ணமூர்த்தி, சுப்ரமணி, ஜி. உமா, ஆர் ஜி கீதா, எம் கே ஜெயந்தி, கோவிலடி ஆர் மத்வ பிரசாத் (திருச்சி).

நாதஸ்வர கலைஞர்களான பி. ஜி. கதிர்வேலு எஸ் முருகம்மாள். யூ. ஈ. பழனிவேல்

வயலின் கலைஞர்கள் எம் ஆர். கோபிநாத் எஸ். உஷா பி. லலிதா (நெய்வேலி) டி எச் குருமூர்த்தி, டி எஸ் பாபுராவ், மிருதங்க கலைஞர்கள் கே எஸ் கணேசன், பி கணேஷ், வி ராமையா, சித்தூர் சியாம் சுந்தர், திண்டுக்கல் ராமமூர்த்தி,

பரதநாட்டியக் கலைஞர்கள் ராமராகவன், என். ஸ்ரீதேவி ஜி. மங்கை, மீனா ராமன், ஆர், சுஜாதா, ஜெயந்தி ராமானுஜம், அ. சித்ரா.

கலைநிகழ்ச்சிகள் நடத்துவதற்கான சபைகளாக ஸ்ரீ சதகுரு சங்கீதசமாஜம் மதுரை, தமிழ்இசைச் சங்கம்-காரைக்குடி, நெய்வேலி, சங்கீத சபா நெய்வேலி, சங்கீத சபா ராணிப்பேட்டை, தியாக பிரும்மசபா - நாகப்பட்டினம், பொள்ளாச்சி-தமிழிசை சங்கம், கலாலயா-சேலம், நாரதகான சபா-கரூர், ராமகானசங்கீதசபா கோபிச் செட்டிப்பாளையம் ரசிக ரஞ்சன சபா-திருச்சி சண்முகானந்த சங்கீதசபா திருப்பூர், சிவகாசிஆர்ட்ஸ் கிளப்-சிவகாசி, தி, நகர் ஆர்ட்ஸ்அகாடமி-சென்னை ஆகியவை தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

அமைச்சர் நாராயணசாமி கோரிக்கை

# மொழிப் பிரச்சினை தீர அரசியல் சட்டத்தை திருத்த வேண்டும்

சென்னை, ஜன 2—"மொழிப் பிரச்சினை தீர வேண்டுமானால் அரசியல் சட்டத்தை திருத்துவதைத் தவிர வேறு வழியில்லை" என்று சட்ட அமைச்சர் நாராயணசாமி கூறினர்

தமிழ்நாட்டு நல்வழிநிலையம் சார்பில் கிருபானந்த வாரியாருக்கு "அருளியல் அறிஞர்" என்ற பட்டமும் சீர்காழி கோவிந்தராஜனுக்கு "அருளிசை அறிஞர்" என்ற பட்டமும், சகஸ்ரநாமத்திற்கு "அருள் கலை அறிஞர்" என்ற பட்டமும் வழங்கப்பட்டது.

தமிழ்நாடு நல்வழி நிலையத்தின் சார்பில் இந்தப் பட்டங்களை கி. ஆ. பெ. விசுவநாதம் வழங்கினர். பேரறிஞர் அண்ணா, அவ்வை டி.கே. சண்முகம், எம்.கே தியாகராஜபாகவதர் படங்களும் திறந்து வைக்கப்பட்டன

விழாவுக்கு வந்தவர்களை நெல்லை ராசானந்தம் வரவேற்றார் வி. ராமமூர்த்தி சிலம்பொலி செல்லப்பன், பி எஸ் கிருஷ்ணசாமி, கே. ராமமூர்த்தி, வி எஸ் மணி, இரா. சிவகுமார், இளையவன், மதிவண்ணன், கி ஆ பெ விசுவநாதம், கிருபானந்தவாரியார் ஆகியோர் பேசினர்

## திணிப்பை ஒழிப்போம்

இவ்விழாவில் சட்ட அமைச்சர் நாராயணசாமி தலைமை வகித்துப் பேசியதாவது:

முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் சிறந்த சமூக சீர்திருத்தவாதி நீதிக் கட்சியிலும் பெரியாரின் பகுத்தறிவு இயக்கங்களிலும் பங்குகொண்டு சாதாரண மக்களின் வாழ்விற்காக பாடுபட்டார்.

இந்தி ஆதிக்கத்தை திணிப்பைகளைவது நமது தலையாய கடமையாகும். ஆட்சி மொழிச் சட்டம் பற்றி நேரு அளித்த வாக்குறுதி காப்பாற்றப்பட வேண்டும். இந்தி தெரியாத மக்கள் மீது இந்தி திணிக்கப்படமாட்டாது என்று நேரு அளித்த வாக்குறுதி காப்பாற்றப்படவேண்டும்,

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 17வது பகுதியை நீக்கவேண்டும்.

## மத்திய அரசுக்கு கோரிக்கை

இந்திமொழி பேசாதவர்கள் மீது இந்தி திணிக்கப்படமாட்டாது என்று அரசியல் அமைப்புச் சட்டத்தில் வாக்குறுதி அளிக்கப்பட வேண்டும்.

இதற்காக அரசியலமைப்புச் சட்டத்தின் 17வது பகுதியை நீக்கிவிட்டு புதிய பகுதியை சேர்க்கலாம்.

இந்தி தெரியாதோரை இரண்டாம் தர பிரஜைகளாக்க நினைக்கும் முயற்சி தடுக்கப்பட வேண்டும். இதற்காக தேவையான திருத்த சட்டங்களை மத்திய அரசு கொண்டுவர வேண்டும்.

முதல்வர் புரட்சித் தலைவர் தமிழ்மொழி பாதுகாவலராக இருக்கிறார் இவ்வாறு சட்ட அமைச்சர் நாராயணசாமி கூறினர்.

கீழத் தஞ்சை மாவட்ட

## அறநிலையத் தலைவராக நாகை கல்யாணம் தேர்வு

தஞ்சை, ஜன. 2- கீழத் தஞ்சைமாவட்ட இந்துமத அறநிலையதுறை பிராந்திய அறங்காவலர் நியமனக் குழு உறுப்பினர்களாக திருவாரூர் தென்கோவன், நாகை இரா கல்யாணசுந்தரம், வ வேதையன், வி தமிழ் மணி மா.ச. மாணிக்கம் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இந்த நியமன குழு தலைவர் தேர்தல் டிச, 27 தேதி நாகையில்நடைபெற்றது. இக்குழுவின் தலைவராக நாகை இரா. கல்யாணசுந்தரம் ஒருமனதாக தேர்ந்து எடுக்கப்பட்டார்.

## அட்சயகோபால்

திருச்சி, ஜன. 2- திருச்சி மாவட்ட இந்து மத அறநிலைய அறங்காவலர் நியமனக் குழுத்தலைவராக பெரம்பலூர் மு. அட்சயகோபால் ஒருமனதாக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார்.

அவருக்கு கழகத்தோழர்கள் மாலை அணிவித்து வாழ்த்து தெரிவித்தனர்.

அமைச்சர் கே. ஏ. கே. பெருமிதம்

# மத்திய மாநில உறவில் முன்னுதாரணமாகத் திகழும் தமிழ்நாடு

சென்னை, ஜன, 2— மத்திய மாநில உறவுக்கு சிறந்த முன்னுதாரணமாகத் தமிழ்நாடு விளங்கி வருகிறது என்று அமைச்சர் கே ஏ கே கூறினர்,

தமிழ்நாட்டு நல்வழிநிலையம் சார்பில் கி ஆ பெ விசுவநாதம் பிறந்த நாள் விழாவும், பேரறிஞர் அண்ணா எம் கே தியாகராஜபாகவதர், அவ்வை சண்முகம் ஆகியோர் படத் திறப்பு விழாவும் மயிலாப்பூர் பாரதிய வித்யாபவனில் நடந்தது.

அமைச்சர் கே. ஏ. கே கி. ஆ. பெ. விசுவநாதத்திற்கு பொன்னாடைப் போர்த்தினர். விழாக்குழுவினர் சார்பில் அளிக்கப்பட்ட 'செந்தமிழ்த் தந்தை' என்ற பட்டத்தை கி. ஆ. பெ. விசுவநாதத்திற்கு அமைச்சர் கே. ஏ. கே வழங்கினர்.

பின்னர் பேரறிஞர் அண்ணா படத்தை திறந்து வைத்து அமைச்சர் கே ஏ கே பேசியதாவது:

## கி. ஆ. பெ. பொதுப்பணி

இரண்டு ஆண்டுகள் தமிழகத்தை அண்ணா ஆண்டபோது அது தமிழகத்தின் பொற்காலமாக விளங்கியது.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் மொழியின் பாதுகாப்பு சின்னமாக-களமாக இருந்தவர் கி. ஆ. பெ. விசுவநாதம்.

தமிழ் பாதுகாப்பு என்ற ஒரு பண்புக்கே தமிழ்நாடு அவருக்கு நன்றி செலுத்த கடமைப்பட்டுள்ளது.

கட்சிகளுக்கு அப்பாற்பட்டு மதங்களுக்கு அப்பாற்பட்டு அவர் செயல்பட்டு வருகிறார்.

பெரியார் தோன்றியிராவிட்டால் அண்ணா முதல்வராக வந்திருக்க முடியாது. அதே போல் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா இல்லா விட்டால் எங்களைப் போன்றவர்கள்-சாமானியர்கள் அமைச்சர்களாக வந்திருக்க முடியாது.

ஒழுக்கப்புரட்சி ஏற்படுத்தியவர் முதல்வர் புரட்சித் தலைவர் இந்த ஒழுக்கப்

புரட்சிக்கு வித்திட்டவர்கள் தந்தை பெரியாரும் அறிஞர் அண்ணாவும்தான்.

இந்தியக் கூட்டாட்சி தத்துவத்திற்கு முன்மாதிரியாகப் பேரறிஞர் அண்ணா விளங்கினர்,

மத்திய மாநில அரசுகளுக்குஇடையே மோதல்-பிணக்கு-மனத்தாங்கல்இல்லாதுமத்திய-மாநில உறவில் முன்மாதிரியாக ஆக்கினர்

அதே போல் இன்று மத்தியிலே ஜனதா அரசு இருக்கிறது இங்கே கழகம் ஆட்சி செலுத்துகிறது.

கொள்கையிலேவேறுபாடு ஏற்பட்டாலும், நாட்டு நலனில் மத்திய மாநில அரசுகளிடை கருத்து வேற்றுமை இல்லை எந்தப் பிரச்சினையானாலும் நாட்டு நலன் கருதி அணுகு முறையில் மோதல் நடக்க வாய்ப்பு இல்லை. தோழமை உணர்வு மேலும் மேலும வளர்ந்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. பேசினர்

## கலெக்டர்கள் மாநாடு

மதுரை, ஜன, 2- மாவட்ட ஆட்சித்தலைவர்களின் மாநாடு நாளை (ஜனவரி 3) மதுரையில் நடக்கிறது. சுகாதார அமைச்சர் ஆர். சவுந்தரராசன் மாநாட்டிற்கு தலைமை வகிக்கிறார்.

மாவட்ட ஆட்சித் தலைவர்களின் மாநாடு, மதுரை மாநகராட்சி மாமன்றக் கூடத்தில்நடைபெறுகிறது

அனைத்து மாவட்ட ஆட்சித் தலைவர்கள், மதுரை, சென்னைமாநகராட்சி ஆணையாளர்கள், மாவட்டங்களின் சுகாதார, சமூக நல அலுவலர்கள் இம் மாநாட்டில் பங்கேற்கின்றனர்.

மதுரை மாநகராட்சி மேயர் எஸ் முத்துவும் மாநாட்டில் கலந்து கொள்கிறார். மற்றும் சுகாதார செயலாளர்மருத்துவத்துறை இயக்குனர் ஆகியோரும் பங்கேற்கின்றனர்.

## ரோட்டரி கிளப் துணி வழங்கியது

சென்னை, ஜன 2- பெருமழையால் பாதிக்கப்பட்ட மக்களுக்குவழங்குவதற்காக சென்னை ரோட்டரி கிளப் சார்பில் முதல் தவணையாக 400 சேலைகளும் 400 லுங்கிகளும் முதல்வர் புரட்சித்தலைவரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன இதனை ரோட்டரி கிளப் தலைவர் தீபக் எல்பேங்கர் அறிவித்துள்ளார்.

# ஈரானில் பயங்கர கலவரம்: 2 ஆயிரம் பேர் படுகொலை

டெஹ்ரான், ஜன 2- ஈரான் கலவரத்தில் 2 ஆயிரம் பேர் கொல்லப்பட்டுள்ளனர்

ஈரான் மன்னர் ஷாவுக்கு எதிராக கலவரம் நடந்து வருகிறது அல்லவா? ராணுவப் பாசறையை ஆர்ப்பாட்டக்காரர்கள் தாக்கிமனைவி முன்னிலையிலேயே ராணுவ மேஜர் ஒருவரைக் கொன்றனர். டாங்கிகளுக்கு தீயிடப்பட்டது. இந்தச் சம்பவம் மஷாத் என்ற நகரில் நடைபெற்றது.

120 பேருக்கு மேல் சாகவில்லை என்று டெலிவிஷனில் செய்தி தெரிவிக்கப்பட்டது. ஆனால் 700முதல் 2 ஆயிரம் பேர் வரை மாண்டதாக மன்னர் ஷாவின் எதிர்ப்பாளர்கள் கூறினர்கள்.

8 லட்சம் பேர்கொண்ட இந்த நகரில் வன்முறைச் செயல்கள் நடைபெற்றன.

புதிய சிவிலியன் அரசை பக்தியார் இருநாட்களில் அறிவித்ததும் நாட்டை விட்டு மன்னர் வெளியேறுவார் என்ற தகவல் மறுக்கப்பட்டது.

பத்திரிகையாளர்களை மன்னர் சந்தித்தார், அவருடன் அரசியும்இருந்தார்.

ஈரான் ராணுவ ஆட்சியைப் பிரதமர் ஜெனரல் குலாம் ரேசா அஜஸி தனதுபதவியை ராஜினாமா செய்தார் அவருடைய ராஜினாமாவை மன்னர் மஹ்லவி ஏற்றுக் கொண்டார்

மக்கள் அரசு ஏற்படுவதற்காக ஈரான் நாட்டு ராணுவபிரதமர் ஜெனரல் குலாம்ரேஜா அஜஸி ராஜினாமாச் செய்துள்ளார்.

துயர் துடைப்பு பணி

## ரேஸ் கிளப் 2 லட்சம்

சென்னை, ஜன. 2- வெள்ளநிவாரணப்பணிகளுக்காக முதல்வரின் நிவாரண நிதிக்கு சென்னை ரேஸ்கிளப் சார்பில் ரூ. 2 லட்சம் வழங்கப்பட்டுள்ளது இதனை முன்னாள் ஷெரீப் ராமகிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

## மாநில மாணவர் மாநாட்டு விளக்க பொதுக்கூட்டம்

வருகிற ஜனவரி 24, 25 ஆகிய தேதிகளில் கோவையில் நடைபெற உள்ள இந்தி திணிப்புஎதிர்ப்பு மாநில மாணவர் மாநாட்டு விளக்க பொதுக்கூட்டம் கீழ்க்கண்ட ஊர்களில் நடைபெறும், மாநில மாணவர் அமைப்பாளர் ஆ. வெள்ளைச்சாமி கூட்டத்தில் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்ற உள்ளார். அந்தந்தத் தொகுதி மாணவர் பொறுப்பாளர்கள் கூட்டம் நடத்திட ஏற்பாடு செய்திடுமாறு கேட்டுக்கொள்கிறேன்,

3-1-79 புதன்கிழமை மாலை மணி தாராபுரம் தொகுதி மாணவர்கள் ஆலோசனைக் கூட்டம். இரவு 7 மணி தாராபுரத்தில் பொதுக்கூட்டம்.

4-1-79 வியாழக்கிழமை மாலை 3 மணி பல்லடம் தொகுதி மாணவர்கள் ஆலோசனைக் கூட்டம். இரவு 7 மணி-சூலூரில் விளக்கப் பொதுக் கூட்டம்.

5-1-79 வெள்ளி மாலை 3 மணி திருப்பூர் தொகுதி மாணவர்கள் ஆலோசனைக் கூட்டம். இரவு 7 மணி திருப்பூரில் விளக்கப் பொதுக்கூட்டம். மேற்கண்ட பொதுக்கூட்டங்களில் மாவட்ட அமைப்பாளர்கள் கலந்து கொள்வார்கள்.

கா. ஷாகத் அலிகான்
கோவை மாவட்ட மாணவர் அமைப்பாளர்

# வெள்ள நிவாரணப்பணிகளை சிறப்பாக செய்த எம். ஜி. ஆரை பாராட்டுகிறேன்

எம். பக்தவத்சலம் பேட்டி

சென்னை, ஜன. 2— வெள்ள நிவாரணப்பணிகளை சிறப்பாகச் செய்த முதல்வர் எம்.ஜி. ஆரைப் பாராட்டுகிறேன்" என்று முன்னாள் முதல்வர் எம். பக்தவத்சலம் கூறினர்.

புத்தாண்டை முன்னிட்டு நிருபர்களுக்கு பேட்டி அளித்த பக்தவத்சலம் கூறியதாவது:

7 நாட்களாக தமிழ்நாட்டில் இடைவிடாது மழை பெய்தது. வெள்ளத்தில்சிக்கிதவித்த மக்களைக் காப்பாற்ற முதல்வர் எம். ஜி. ஆரும், மற்ற அமைச்சர்களும் நிவாரணப் பணிகளில் ஈடுபட்டு சிறப்பாக சேவை செய்தது மிகவும் பாராட்டுக்கு உரியது.

அவர்கள் செய்தபணிகளை எண்ணி பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்.

எந்தக் கட்சியைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் மக்களுக்குஉரிய நேரத்தில் உதவி செய்பவர்களை பாராட்டத்தான் வேண்டும்.

இதுபோன்ற நேரங்களில் அனைத்துக் கட்சி குழு போடுவதற்கு இடமில்லை.

இவ்வாறு எம் பக்தவத்சலம் கூறினர்.



அமைச்சர் குழந்தைவேலு வெளியிட்ட

## வேளாண்மை தொழில் நுட்ப கையேடு

சென்னை, ஜன. 2- வேளாண்மைபட்டதாரிகள் சங்கம் வெளியிட்டுள்ள தொழில் நுட்ப கையேட்டினை அமைச்சர் குழந்தைவேலு வெளியிட்டார்,

வேளாண்மை பட்டதாரிகள் நஞ்சை விவசாயிகட்கு ஆலோசனை சொல்வதோடு புஞ்சை விவசாயிகட்கும் ஆலோசனை கூறவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

விழாவுக்கு எஸ். முத்துக்குமாரசாமி தலைமை தாங்கினர், என். ராஜசேகரன் வரவேற்றுர் தங்கள்சங்கம் கோரிக்கைகளை அரசுடன் தீர்த்துக் கொள்ளும். போராட்டம் எதையும் செய்யாது என்று அவர்கள் கூறினர்கள்.

விழாவில் கே. சண்முகசுந்தரம், வேளாண்மைத் துறை செயலாளர் அரிபாஸ்கர் ஆகியோரும் பேசினர்கள்.

## ஜனதாக் கட்சி உடையாது: தேசாய் உறுதி

கண்ணனூர், ஜன. 2— ஜனதாக் கட்சி உடையாது என்று பிரதமர் மொரார்ஜிதேசாய் கூறினர்.



கண்ணனூரில் நடந்த ஜனதாக் கட்சி பொதுக் கூட்டத்தில் மொரார்ஜி தேசாய் பேசுகையில் கூறியதாவது;

ஒரு கட்சிக்குள் கருத்து வேறுபாடு ஏற்படுவது என்பது புதிது அல்ல. மற்ற ஜனநாயக நாடுகளில் எல்லாம் அவ்வாறு வேறுபாடுகள் ஏற்படத்தான் செய்யும். இங்கிலாந்தில் உள்ள தொழிற் கட்சியை எடுத்துக்கொண்டால், அந்தக் கட்சியின் ஒரு தலைவர் மற்றொருதலைவர் செயலை எதிர்ப்பது உண்டு.

ஜனதாக்கட்சி உடைந்தால் ஜனநாயகம் அத்துடன் முடிந்து விடும்.

ஆனல் ஜனதாக் கட்சி உடையாது. கட்சி உறுதியாக இருக்கும் என்று திட்டவட்டமாக உணர்வதால் தான் இதனைச் சொல்கிறேன்.

### நம்பாதீர்

ஜனதாக்கட்சி உடைந்துவிடும் என்று இந்திராகாங்கிரசார்பொய்ப்பிரச்சாரம் செய்து வருவதை நம்பாதீர்கள். நீங்கள் நம்பமாட்டீர்கள் என்பதுஎனக்குத் தெரியும். இல்லாவிட்டால் இந்த அளவுக்கு பிரும்மாண்டமான அளவில் இங்கே திரண்டிருக்க மாட்டீர்கள்.

1977 ஜனவரியில் பொதுத்தேர்தல் நடத்த இந்திரா அறிவித்ததும் ஜனதாக் கட்சி உருவாக்கப்பட்டது. அவசர நிலை என்ற இருண்ட காலத்தில் நான் அரியானவில் தனிமைச்சிறையில் வைக்கப்பட்டிருந்தேன்

என்ருலும் எனக்கு இந்திரா மீது எந்த விதகுரோத உணர்ச்சியும் இல்லை.

தற்போதுநாட்டில் சுதந்திரம் உள்ளது. அரசுஎதையும் ரகசியமாகச் செய்யவில்லை. பத்திரிகைகள் சுதந்திரமாகச் செயல்படுகின்றன. என்ருலும் பத்திரிகைசுதந்திரம்இல்லை என்று சிலர் பிரச்சாரம் செய்கிறார்கள்.

இவ்வாறு பிரதமர் மொரார்ஜி தேசாய் கூறினர்.

கோவிந்தசாமி நகர்

## குடிநீர்கோரிக்கை ராகவானந்தம் உடனடி உத்தரவு



சென்னை, ஜன. 2- சென்னை மந்தைவெளி அருகிலுள்ள கோவிந்தசாமி நகர மக்கள் 200க்கும்மேற்பட்டோர் தங்கள்பகுதிக்கு குடிநீர் வசதியில்லை என்று அமைச்சர் ராகவானந்தத்திடம் கோரிக்கை விடுத்தன.

உடனே அந்த மக்களில் ஒருவரை தன்னுடன் அழைத்துக் கொண்டு கோவிந்தசாமி நகரை அமைச்சர் ராகவானந்தம் சுற்றிப்பார்த்தார். அமைச்சர் பார்வையிட வந்திருக்கிருர் என்றதும் அப்பகுதி மககள் குழந்தைகளோடு குடும்பம் குடும்பமாக திரண்டு வந்து கோரிக்கையைச் சொன்னர்கள்.

மக்களின் குறைகளை கேட்ட பிறகு மறுநாள் குடிநீர் வடிகால் வாரிய அதிகாரியைஅனுப்புவதாக சொல்லிவிட்டு வந்தார.

இன்று காலை சென்னை பெருநகர குடிநீர்வடிகால வாரிய அதிகாரி கோவிந்தசாமிநகா பகுதியை சுற்றிப்பார்த்தார்.

இநத பகுதியில் 150 குடும்பங்கள்இருக்கின்றன. இவர்கள் அரைகிலோ மீட்டர் தூரத்திலுள்ள ராதா கிருஷ்ணன் நகரில் இருந்து தான் குடிதண்ணீர்எடுத்து வரவேண்டும் என்று அதிகாரி அமைச்சா ராகவானந்தத்திடம் சொன்னர்.

அமைச்சர் ராகவானந்தத்தின் உத்தரவின் பேரில் கோவிந்தசாமிநகரில் ஒரு குடிநீர்குழாய்உடனடியாக போட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஏழை மக்களுக்கு

# அனுப்பப்பட்ட உணவை பறித்துச் சென்ற தி.மு.க. எம். எல். ஏ.

புரட்சித்தலைவர் கண்டனம்

சென்னை, ஜன. 2- பேய் மழை-பெருவெள்ளத்தால் வீடிழந்து தவிக்கும் ஏழை மக்களுககு அரசு அனுப்பிய உணவை மனிதாபிமானம் இல்லாமல தி. மு. கழக எம். எல். ஏ ஒருவர் பறித்துச சென்ருர் என்ற கொடுமையை முதல்வர் புரட்சிததலைவர் வேதனையோடு தெரிவித்துள்ளார்.



ஆங்கிலப் புத்தாண்டு தினத்தையொட்டி முதல்வர் புரட்சித்தலைவர் வெளியிட்டுள்ள செய்தியில் அரசியல் நோக்கத்தோடு குறை சொல்லாதீர் என்றும் புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்துள்ளார.

முதல்வர் புரட்சித்தலைவா வெளியிட்டுள்ள புத்தாண்டுச் செய்தி வருமாறு:

''பல்வேறு சோதனைகளுக்குநம்மைஉள்ளக்கியா 78ம் ஆண்டைத் தாண்டி, புதிய ஆண்டில் அடிஎடுத்து வைக்குமுன்பு, கடந்த ஆண்டில் நாம்கடந்துவந்த பாதையை நினைவுபடுத்திக் கொள்வது நலம் என்று கருதுகிறேன்.

### முன் எச்சரிக்கை நடவடிக்கை

78-ம் ஆண்டில் செயற்கையாகவும், இயற்கையாகவும் விளைந்த பல துன்பங்களைத் தமிழக மக்கள் சந்தித்திருக்கிருர்கள். அவைகளை எல்லாம் அரசின் முன்னெச்சரிக்கையான செயலாலும் மக்களின் கட்டுப்பாடான உணாவாலும் கடந்து வந்திருக்கிருேம். ஆனலும் கடந்த நவமபர் திங்களில் கடுமையான புயல்-வெள்ளத்தின் காரணமாக ஆயிரக்கணக்கான ஏக்கா விவசாய நிலம் நீரில்மூழ்கியது. நீலகிரி மாவட்டத்தில் சில இடங்களில் நிலச்சரிவு ஏற்பட்டு நூற்றுக்கு மேற்பட்டோர் உயிரிழந்தாாகள்.

புயல், வெள்ளம், நிலச்சரிவு இதனல் ஏராளமான இழப்புகள் ஏற்பட்டது என்ருலும் தமிழக அரசு முன்னெச்சரிக்கையாக நடவடிக்கை எடுத்ததன் காரணமாக பெருத்த சேதம் குறிப்பாக உயிாச்சேதம் ஏற்படாமல் தவிர்க்கப்பட்டது.

### துயர் துடைப்பு பணிகள்

1979 புத்தாண்டில் அடி எடுத்து வைக்கும் இந்த நேரத்திலும் வழக்கத்திற்கு மாருன இடைவிடாதமழையாலும் அதன் விளைவாக ஏற்பட்ட வெள்ளத்தாலும் சென்னை நகரிலும் தமிழகத்தின்வேறு பகுதிகளிலும் கடுமையான பொருள்சேதமும் உயிர் இழப்புகளும் ஏற்பட்டு நம்மை பெருங்கவலைக்குஉள்ளாக்கி இருக்கிறது. தமிழக அரசு பாதிக்கப்பட்டோரின்துயர் துடைக்க அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டுள்ளது.

இந்தத் துயர்துடைப்புப் பணிக்கு உறுதுணையாகநின்று இரவென்றும் பகலென்றும் பாராமல் ஒத்துழைப்பு அளித்து வரும் அரசு அலுவலர்களுக்கும், காவல் துறையினருக்கும், ராணுவத்தினருக்கும், பொது மக்களுக்கும், இதர சமூக அமைப்புகளுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அதிகமான மழையின் காரணமாக தண்ணீர் பஞ்சம் நீங்கிவிட்டது என்கிற மகிழ்ச்சி ஒருபுறமிருந்தாலும், வீடு இழந்து, வெவ்வேறு இடங்களுக்கு குடிபெயாந்து உணவு சமைக்கவும் வழி இல்லாது மக்கள் எத்தகைய துன்பங்களுக்கு ஆளாகி இருக்கிருாகள் என்று பார்க்கும் போது நெஞ்சம் நடுங்குகிறது.

அவர்களின் துன்பத்தை பற்றிகொஞ்சமும்எண்ணிப் பாாக்காமல் இந்தச் சந்தர்ப்பத்திலும் சமூக விரோதிகள் மேலும் அவர்களுக்கு துன்பம் கொடுகக முயற்சிப்பதை என்னவென்று சொல்லுவது! துன்பத்திற்கு உள்ளானவர்களின் துயர் துடைக்க அரசுமேற்கொள்ளும் பணிகளைக் குறை சொல்லவேண்டும் என்ற

(4-ம் பக்கம் பார்க்க)

## ஆட்டோகிராப்: தேசாய் விதித்த நிபந்தனை

பவுனர், ஜன. 2-வினேபாவைச் சந்திக்க பவுனர் ஆசிரமத்துக்கு வந்திருந்த மொரார்ஜியிடம் ஆட்டோகிராப் கேட்டார் ஒரு இளம்பெண். ''கதர் அணிந்தவர்களுக்கு மட்டுமே ஆட்டோகிராப் (கையெழுத்து) தருவதாக தேசாய் சொன்னர். இனி மேல் தலையில் கட்டும் ரிப்பன் கூட கதரில் தான் கட்டுவேன் என அந்தப் பெண் உறுதியளித்த பின்பு தான் மொரார்ஜி ஆட்டோகிராப் போட்டுத்தந்தார்,



# வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஏழைமக்களுக்கு வேட்டிசேலைகள்

## முதல்வர் புரட்சிதலைவர் வழங்கினர்

சென்னை, ஜன 2- வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஏழை மக்களுக்கு 50 கிலோ அரிசியுடன் வேட்டி சேலையும் அளிக்கப்படுகிறது நிவாரண முகாம் களுக்கு நேரடியாகச் சென்று முதல்வர் புரட்சித்தலைவர் ஏழை மக்களுக்கு வேட்டி சேலையும் வழஙகினர்,

சென்னையில் கடந்த ஒரு வாரமாக பலத்த மழை பெய்ததால் 10 ஆயிரத்துக்கும்மேற்பட்ட குடும்பங்கள் பாதிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு தலா 50 கிலோ அரிசி கொடுக்கவேண்டும் என்று முதல்வா புரட்சித்தலைவா உத்தரவிட்டது தெரிந்ததே. முகாம்களில் தங்கி இருக்கும் ஏழை மக்களுக்கு இலவச உணவும் வழங்கப்பட்டது.

இது தவிர பாதிக்கப்பட்ட மக்களுக்கு இலவசமாக சேலையும், லுங்கியும் கொடுக்கப்படுகிறது.

கோட்டூரபுரம் பகுதியில் பாதிக்கப்பட்ட 3,200 பேருக்கு நேற்று முதல் கட்டமாக சேலை லுங்கி கொடுக்கும் பணி தொடங்கப்பட்டது. முகாமகளில் தங்கியிருக்கும் ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒவவொரு அடையாள காாடு வழங்கப்பட்டது. இந்த அடையாள கார்டுகளை மாநகராட்சி, ஊர்க்காவல் படை, நகர போலீஸ் ஆகியதுறைகளைச் சேர்ந்த அதிகாரிகள் சரி பார்த்து தவறுதல்கள் அல்லது முறைகேடுகள் எதுவும் நடைபெற வழி ஏற்படாமல் அவர்களை வரிசைப்படுத்தி நிறுத்தி வைத்திருந்தனர். அவாகளுக்கு முதல்வர் வேட்டி, சேலை வழங்கினர்.

வேட்டி சேலைகளை முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினர்,

பெண்கள் கைக்குழந்தைகளுடன் வந்து துணிமணிகளை வாங்கிச்சென்றனர். ஒரு பெண் பெயரில் உள்ள கார்டை இன்னொரு ஆதாமி கொண்டு வந்தார். இதைப் பார்த்த முதல்வர் புரட்சித்தலைவர் அந்தப் பெண்ணையே வந்து வாங்கிச் செல்லும் படி கூறினர். கார்டு பெயரில் உள்ளவர்களுக்கேசேலை லுங்கியை வழங்க வேண்டும் என்று அதிகாரிகளிடம் கூறினர்.

சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியில் அமைககப்பட்டிருநத வெள்ள நிவாரண முகாம்களில் தங்கியிருந்தோருக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வேட்டி சேலைகள் வழங்கினர்.

வேட்டி சேலை பெற்றுக் கொண்ட 525 பேர்களில் 400 பேர் பெண்கள் 80 பேர் ஆண்கள் 45 பேர் தொழு நோயாளிகள் இந்த நிகழ்ச்சியில் அமைச்சர்கள் கே ஏ கே, குழந்தை வேலு ஆகியோரும் கலந்து கொண்டனா.

### நேரடியாகச் சென்று வழங்கினர்

காந்தி மண்டபம், கிண்டி என்ஜினியரிங் கல்லூரி, சைதாப்பேட்டை ஆசிரியா பயிற்சிக் கல்லூரி, தேனும்பேட்டை காங்கிரஸ் மைதானம், அம்பேத்கார்கலைக்கல்லூரி, அண்ணு நகர் இநதிய மருத்துவமனை, கந்தசாமி நாயுடு கல்லூரி, வேப்பேரி கால்நடை மருத்துவக் கல்லூரி ஆகிய இடங்களுக்கு உடன்சென்று வெள்ளத்தால் [illegible]ப்பட்டவர்களுக்கு

### மகராசனு இருக்கணும்

இன்னெரு மூதாட்டி முதல்வர் புரட்சித் தலைவரை பாராட்டினர். "ஏழைகளுக்காக நீங்க எல்லா உதவிகளையும் செய்யறீங்க நீங்க மகராசனு இருக்கணும்'' என்று கூறினர்.

600க்கு மேற்பட்டவாகளுக்கு கல்வி அமைச்சர் அரங்கநாயகம் துணிகளை வழங்கினா.

அமைச்சர் ராஜாமுகமது சென்னைமாநகராட்சி கழக சீரமைப்புக் குழு தலைவர் டாக்டர் ஹண்டே எம் எல் சி, மாநகராட்சி தனி அதிகாரி ராமதாஸ் ஆகியோரும் முதல்வர் புரட்சித்தலைவருடன் சென்றனர்.

## தமிழ்நாடு நர்சரி சங்க நிர்வாகிகள்

சென்னை, ஜன. 2- தமிழ்நாடு நர்சரிஆரம்ப பள்ளிக்கூடங்கள் சங்கத்தின் நிர்வாகிகளாகப் பின் கண்டவர்கள் தேர்ந்து எடுக்கப்பட்டனா.

தலைவர்: என்.ஸ்ரீராமன் பொதுச்செயலாளர் கே. ராமச்சந்திரன், துணைத் தலைவர் ஜே. ஏ. ஞானம், அமைப்புச்செயலாளா ஏ. ஜி. சுப்பிரமணியம். துணைச்செயலாளா திருமதி நிர்மலா, நிதிச்செயலாளர் எஸ். என். ஜார்ஜ்.

பொது உறுப்பினர்கள் கூட்டத்தில் மேற்கண்ட நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்,

சென்னை முகாம்களில் அமைச்சர் பண்ருட்டி

## அரசு உதவிக்கு மக்கள் நன்றி

சென்னை, ஜன. 2- கோட்டூர்புரம், காந்தி மண்டபம், சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, கிண்டி பொறியல் கல்லூரி ஆகிய பகுதிகளில் இருந்த வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் சந்தித்து ஆறுதல் கூறினர். நிவாரண உதவிகளை துரிதப்படுத்தினர்.

சைதாப்பேட்டையிலும் கிண்டி என்ஜினியரிங் கல்லூரியிலும் இருந்த மக்கள் உணவு தரமானதாக சுவையாக இருந்ததுஎன்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனிடம் திருப்தி தெரிவித்தனர்.

பல இடங்களில் மக்கள் ரொட்டிகளைக் கேட்டனர். அந்த இடங்களில் ரொட்டிகளை வழங்குமாறு அமைச்சர் பண்ருட்டி உத்தரவிட்டார்.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு தரமான [illegible] உணவு வ[illegible] உத்தரவிட

## வேலூர் மாணவர்க்கு நாவலர் வாழ்த்து

வேலூர், ஜன. 2- வேலூா அரசினா கலைக் கல்லூரி மாணவர் அமைப்புக்கூட்டம் ஏ. சி. சண்முகம் தலைமையில் நடைபெற்றது. இவ்வாண்டு அமைப்பு நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

அமைப்பாளராக என். சுப்பிரமணி, அவைத்தலைவராக துரை கோவிந்தராசன், துணை அவைத் தலைவராக சாந்தகுமார், துணை அமைப்பாளர்களாக பி. காத்தவராயன், என். குப்புசாமி பி. சந்திரன், செயற்குழு உறுப்பினர்களாக 13 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கூட்டத்தில் கோதண்டன் போளூர் தொகுதி அமைப்பாளர் கோவிந்தன் கலசை தொகுதி மாணவர் அமைப்பாளர் ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் கலநதுகொண்டனர்.

தேர்ந்தெடுக்கப் பட்ட அமைப்பு நிர்வாகிகள் நாவலரைச் சந்தித்துமாலை அணிவித்து வாழ்த்து பெற்றனர்.



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை 600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

# அண்ணா





## புரட்சிதலைவர் கண்டனம்

(3 ம் பக்கத் தொடர்ச்சி)

அரசியல் நோக்கத்தோடு சிலர் பழிசுமத்தும் காரியத்தில் இறங்கியிருக்கிறார்கள்.

வீடுகள் இழந்து வேறு இடங்களில் குடி பெயர்ந்து சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு ஆளாகி இருக்கும் ஏழை எளிய மக்களுக்கு அனுப்பப்படுகின்ற உணவைக்கூட பறித்துச் செல்லுகின்ற செயலில் ஒரு கட்சியைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர் ஈடுபட்டார் என்பதைக் கேள்விப்படும் பொழுது, மனிதாபிமானம் உள்ள எவரும் அந்தச் செயலை வன்மையாக கண்டிக்காமல் இருக்க முடியாது.

அந்த சமயம் தங்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்களைப் பெரிதுபடுத்தாமல் தொல்லைகளை அமைதியாக ஏற்று, ஒழுங்குடனும், கட்டுப்பாட்டு உணர்வுடனும் நடந்துகொண்ட ஏழை-எளிய மக்களை நான் பெரிதும் பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன்.

### உழைப்பே காரணம்

எரிமலை பூகம்பம், கடற் சூறாவளி போன்ற இயற்கையின் தாக்குதல்கள் மிகுதியாக உள்ள ஜப்பான் நாடு பெரும் அளவுக்கு முன்னேறி இருப்பதற்கு அந்நாட்டு மக்களின் ஆற்றல் மிக்க உழைப்பும் தன்னம்பிக்கையும் தான் காரணம்.

சமீபத்தில் நான் ஜப்பானில் இருக்கும்போதே ஒரு சமயம் அங்கு நில நடுக்கம் ஏற்பட்டது அந்தச்சந்தர்ப்பத்திலும் ஜப்பானிய மக்கள் கொஞ்சமும் பதட்டம் அடையாமல், தங்கள் வேலைகளில் தொடர்ந்து ஈடுபட்டார்கள். நில நடுக்கத்தால் பாதிக்கப்படாத வீடுகளை விஞ்ஞான அறிவு நுட்பத்துடன் அவர்கள் அமைத்திருக்கிறார்கள்.

அவர்களின் உழைப்பும் எந்தக் கஷ்டத்தையும் மன அமைதியோடு தாங்கும் துணிவும் அந்த நாட்டைப் பொருளாதார வளமுடைய நாடாக உருவாக்கி இருக்கிறது.

### வளம் சிறக்க செய்வோம்

தமிழ்ப் பெருங்குடி மக்களும் கடின உழைப்பில் ஈடுபட்டு தமிழகத்தை வளம் சிறக்கச் செய்யும் பணியில் தங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ள இந்த நன்னாளில் சூளுரை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

தொழிலாளர்களும், தொழில் அதிபர்களும் நாட்டின் நலனை மனதில் கொண்டு ஒத்துழைத்து அதேசமயம் தொழிலாளர்கள் தங்களுடைய நியாயமான உரிமைகளை விட்டுக் கொடுக்காமல் தங்கள் கடமையைச் செய்து உற்பத்தியைப் பெருக்கிடும் பணியில் ஈடுபடவேண்டும் என்று வேண்டுகிறேன்.

தொழிலாளர்கள் மாணவர்கள் மீதுள்ள வழக்குகளை அரசு திரும்பப் பெற்றிருக்கிறது. அனைவரும் யாருக்கும் தொல்லை தராமல், தங்கள் தங்கள் கடமைகளை சிறப்பாகச் செய்ய வேண்டும் என்கிற நல்லெண்ணத்திலேயே அரசு இதைச் செய்துள்ளது. கோரிக்கை எதுவானாலும் அதனை சமரசமாகப் பேசி சுமுகமான தீர்வு காண முடியும் என்பதில் தமிழக அரசு உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கிறது.

### குழந்தைகள் ஆண்டு

1979ஆம் ஆண்டு குழந்தைகள் ஆண்டாக அறிவிக்கப்பட்டுள்ளது. குழந்தைகளின் எதிர்காலம் சிறப்பாக அமைந்தால்தான் வருங்காலத் தலைமுறையும் சீரிய முறையில் உருவாக முடியும்.

### தமிழக அரசு திட்டம்

குழந்தைகளின் நலன் பேணும் பலவிதத் திட்டங்களை தமிழக அரசு செயல்படுத்த இருக்கிறது என்கிற மகிழ்ச்சியான செய்தியை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். மாவட்டத் தலைநகரங்கள், தாலுகா தலைநகரங்கள், ஆகியவற்றில் குழந்தைகளுக்கான விளையாட்டு மைதானங்கள், அவர்கள் படிப்பதற்கு ஏற்ற நூல்களைக் கொண்ட குழந்தைகள் நூல் நிலையங்கள், குழந்தை கல்விக்கான இதர ஏற்பாடுகள் ஆகிய அனைத்தையும் செய்ய தமிழக அரசு திட்டமிட்டுள்ளது.

இதற்காக மத்திய அரசு ஒதுக்கியுள்ள நிதியை தமிழக அரசு முழுமையாக பயன்படுத்திக்கொள்ளும்.

அதுபோலவே வெள்ளத்தால் பாதிக்கப்படாதவகையில் ஏழை எளிய மக்கள் வாழும் பகுதிகளை உருவாக்கும் யோசனையும் தமிழக அரசுக்கு இருக்கிறது. வெள்ளம் வந்தால் வீட்டில் இருந்து சாப்பிடக்கூட முடியாத அவல நிலைக்கு ஆளாகி, ஏழைகளின் வீடுகள் தண்ணீரில் மிதக்கும் அபாயத்தைப் போக்கும் வகையில் திட்டமிடப்படும் என்பதை மட்டும் இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

### புத்தாண்டு வாழ்த்து

ஆகவே, அனைவரும் அரசு நிறைவேற்ற இருக்கும் திட்டங்களுக்கும், ஆக்கப்பணிகளுக்கும் முழு ஒத்துழைப்பு அளித்து வளமான தமிழகத்தை உருவாக்கிட வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மேற்கண்டவாறு அறிக்கையில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியுள்ளார்.

மார்க்கபந்து அறிவிப்பு

## தோழமை உறவு நீடிக்கும்

வேலூர், ஜன: 2- அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்துடன் உழைப்பாளர் முன்னேற்றக் கட்சியின் உறவு நீடிக்கும் என்று அதன் தலைவர் மார்க்கபந்து கூறினார்.

வேலூரில் நடந்த தந்தை பெரியார் நூற்றாண்டுவிழாவில் கலந்துகொண்டு அவர் பேசியதாவது:

பெரியாரின் ஒரே வாரிசாக புரட்சித் தலைவர் இருக்கிறார்.

பெரியாரின் வாரிசு என்று சொல்லிக்கொள்ள கருணாநிதிக்கு அருகதை இல்லை.

மது மயக்க நிலைக்கு மக்களை ஆளாக்கிய அவர் பெரியாரின் சீடர் அல்ல- உண்மைச் சீடர் புரட்சித் தலைவர் தான்.

நலிந்தவர்களுக்காக புரட்சித்தலைவர் நல்லாட்சி நடத்துகிறார். மாசு மருவற்ற ஆட்சியை நடத்துகிறார். பெரியார் கண்ட கனவை நனவாக்கி வருகிறார்.

அப்படிப்பட்ட ஆட்சி நடத்தும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்துடன் உழைப்பாளர் முன்னேற்றக்கட்சி துணையாக நிற்கும். தோழமை உறவோடு செயல்படும்.

இவ்வாறு மார்க்கபந்து கூறினார்.



## தமிழ்நாடு அரசு
## பொதுப் பணித்துறை
## சிறு டெண்டர் அறிக்கை

**ஒப்பந்த விவரம்: LUMPSUM**

ஒவ்வொரு பள்ளிக்கூட வேலைக்குமான டெண்டர் குறிப்பின் விலை விவரி & சார்சார்ஜ் சேர்த்து (திருப்பியளிக்கப்படமாட்டாது.) — Rs 78.15

ஒவ்வொரு பள்ளிக்கூட வேலைக்கும் டேவணித் தொகை டெபாஸிட் — ரூ 3,125-

டெண்டர் கொடுப்பதற்கு தகுதி பெற்ற காண்ட்ராக்டர்கள் — IIIவது வகுப்பு மற்றும் அதற்கு மேல்.

தமிழ்நாடு அரசு, ஆளுநர் அவர்கள் சார்பிலும் அவருக்காகவும், தமிழ்நாடு அரசின் பொதுப்பணித்துறையில் தகுந்த வகுப்பில் பதிவு செய்து கொண்டுள்ள காண்ட்ராக்டர்களிடமிருந்து முத்திரையிட்ட டெண்டர்கள், மேற்பார்வைப் பொறியாளர், பொதுப்பணித்துறை, ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், சென்னை - 600 005 அவர்களால், கீழே ஒவ்வொன்றிற்கும் எதிராக கொடுக்கப்பட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணி வரை பெற்றுக் கொள்ளப்படும்.

| வரிசை எண் | வேலையின் பெயர் | டெண்டர் குறிப்புகள் கிடைக்கும் அலுவலகத்தின் பெயர் | தேதிகள் | டெண்டர் பெற்றுக் கொள்வதற்கான இறுதிதேதி | டெண்டர்கள் சமர்ப்பிக்கப்பட வேண்டிய இடம் |
|---|---|---|---|---|---|
| I. | சென்னை நகரில் 10+2+3 கல்வித் திட்டத்தின் கீழ் ஒரு வகுப்பு அறை, ஒரு பரிசோதனைச் சாலை ஆகியவற்றிற்கான கட்டிடம் கட்டுதல், a) லேடி வெல்லிங்டன் ஹையர் செகண்டரிபள்ளி திருவல்லிக்கேணி. b) அரசாங்க மாடல் ஹையர் செகண்டரி பெண்கள் பள்ளி, திருவல்லிக்கேணி c) அரசாங்க ஹையர் செகண்டரி ஆண்கள் பள்ளி, மேற்கு மாம்பலம். d) அரசாங்க ஹையர் செகண்டரி ஆண்கள் பள்ளி, கோடம்பாக்கம் e) முஸ்லிம் பெண்களுக்கான ஹோபார்ட் செகண்டரி ஸ்கூல் & பயிற்சிப் பள்ளி ராயப்பேட்டை. | | | | |
| II. | செங்கல்பட்டு மாவட்டத்தில் கீழ்க்காணும் ஊர்களிலுள்ள அரசாங்க ஹையர் செகண்டரி பள்ளிகளில் a) திருக்கழுக்குன்றம் (b) நந்திவரம் (c) குன்றத்தூர் (d) காமராஜ் நகர் (e) ஆவடி (f) ரெட்ஹில்ஸ் (g) அனகாபுத்தூர் (h) செய்யூர் (i) அத்திமாஞ்சேரிப்பேட்டை (j) செங்கல்பட்டு (k) பொதட்டூர் பேட்டை (l) ஆர். கே. பேட்டை (m) ஊத்துக்கோட்டை (n) திருவாலங்காடு (o) அம்மையார் குப்பம் (p) கே. ஜி. கண்டிகை (q) கனகம்மா சத்திரம் (r) திருப்போரூர் (s) வாலாஜாபேட்டையிலுள்ள அறிஞர் அண்ணா அரசாங்க பள்ளி | மேற்பார்வை பொறியாளர் பொதுப்பணித் துறை, ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், சென்னை-5 | 10 1 79 to 22 1 79 | 23-1 79 | மேற்பார்வை பொறியாளர் அலுவலகம் P. W. D. ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள் சென்னை-5 |
| III. | வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள அரசாங்க உயர்நிலைப்பள்ளிகள் உள்ள (a) செய்யாறு (b) அரக்கோணம் (c) பனப்பாக்கம் & (d) தக்கோலம் வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள (1) திருப்பத்தூர் (பெண்களுக்கானது) (2) திருப்பத்தூர் (ஆண்களுக்கானது) (3) கண்ணமங்கலம் (4) கலசபாக்கம் (5) கீழ்பென்னாத்தூர் (6) தண்டராம்பேட்டை (7) காட்பாடி (8) பெருங்காட்டூர் (9) சேங்காடு (10) மாடவளம் (11) அலங்காயம் (12) கணியம்பாடி (13) சரசிப்பாக்கம் (14) ஊசூர் (15) மின்னல் (16) கஜநாயக்கன்பட்டி (17) வந்தவாசி. | நிர்வாகப் பொறியாளர் பொதுப்பணி துறை ஸ்பெஷல் பில்டிங்ஸ் டிவிஷன் வேலூர் வ.ஆ. மாவட்டம் | 11-1-79 to 23-1-79 | 24-1-79 | நிர்வாகப் பொறியாளர் அலுவலகம் P. W. D. ஸ்பெஷல் பில்டிங்ஸ் டிவிஷன் வேலூர் வ. ஆ. மாவட்டம் |
| | (18) நெல்லூர் பேட்டை (19) புதுப்பாளையம் (20) தேவிகாபுரம் (21) வானபுரம் (22) குடியாத்தம் (23) பேரணமல்லூர் (24) வேட்டவலம் (25) திமிரி (26) பள்ளிகொண்டா (27) கே. வி. குப்பம் (28) ஒடுகத்தூர் (29) ஆரணி (30) களம்பூர் (31) கீழ்கொடுங்காலூர் (32) கலவை (33) வேலூர் (34) கடக்கால் (35) பொன்னை (36) ராணிப்பேட்டை | நிர்வாகப் பொறியாளர் பொதுப்பணித் துறை ஸ்பெஷல் பில்டிங்ஸ் டிவிஷன் வேலூர் வ.ஆ. மாவட்டம் | 11-1-79 to 24-1-79 | 25-1-79 | நிர்வாகப் பொறியாளர் அலுவலகம் P. W. D. ஸ்பெஷல் பில்டிங்ஸ் டிவிஷன் வேலூர் வ. ஆ. மாவட்டம் |

இதர விவரங்கள், மேற்பார்வை பொறியாளர் அலுவலகம், பொதுப்பணித்துறை, ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், சென்னை, மற்றும் நிர்வாகப் பொறியாளர், பில்டிங்ஸ் டிவிஷன் வேலூர், அவர்களிடம், எல்லா அலுவலக நாட்களிலும், அலுவலக நேரங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

G. கஜபதி,
மேற்பார்வைப் பொறியாளர், P. W. D.,
ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள் சென்னை - 5.

DIPR - 56457 - 78 - 40 - Im

## NCERT
### தேசீய திறன் சோதனை தேர்வு 1979
## தேதிகள் ஒத்திவைப்பு

விண்ணப்ப பாரங்கள் பெறுவதற்கான மனுக்கள் கொடுப்பதற்கான இறுதி தேதி 1979 ஜனவரி 25ம் தேதி வரையிலும், மற்றும் விண்ணப்ப பாரங்கள் சம்பந்தப்பட்ட மையத்தின் (Centre) சூப்பரின்டென்டெண்டுகளிடம் சமர்ப்பிப்பதற்கான இறுதி தேதி 1979, பிப்ரவரி 10ம் தேதி வரையிலும் நீடிக்கப்பட்டுள்ளது. davp 78-386ல் பிரசுரிக்கப்பட்ட விளம்பரத்தின் இதர விவரங்களில் மாற்றம் ஏதுமில்லை.

DAVP 78-4